# ஸ்ரீராமாநுஜன் - 373



ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான். P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 32 | சித்தார்த்தி௵ வைகாசி௴ 1979௵ மே௴ | பகுதி 1


ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வலபாரிஜாதாய நம:

## நித்யாநுஸந்தேயநிகமாந்தகுருஸூக்திசதகம்

ஸ்ரீமந்நிகமாந்தகுரோ: நிரவதிநிரவத்யஸூக்திநிசயேஷு,
நித்யாநுபாவ்யஸூக்தீ: சதமிஹ ஸங்க்ருஹ்ய தர்சயதி தாஸ:.

### முகவுரை.

ஸ்வாமிதேசிகன் வடமொழியிலும் தென்மொழியிலும் (பிராகிருத பாஷையிலுங்கூட) அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகள் எண்ணிறந்தவை. நித்யஸ்மரணீயரான அடியேனுடைய திருத்தகப்பனார் ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் முதலான ஆசாரியர்களின் திவ்ய ஸூக்திகளோடொக்க தேசிகனுடைய திவ்யஸூக்திகள் பலவற்றையும் இளமையிலேயே மனப்பாடம் செய்வித்தருளினபடியால் அவற்றை அடிக்கடி சிந்தித்து மகிழ்ந்துவருகிறேன். அத்தகைய ஸ்ரீஸூக்திகளில் உபயவேதாந்தப் பொருள்கள் ஜ்வலிக்கும்படியாகவுள்ள ஸ்ரீஸூக்திகளைத் திரட்டி ஒரு சிறுநூல் இயற்றவேணுமென்று ருசியுண்டாகி இதனை இயற்றத்தொடங்குகின்றேன். இதற்கு நித்யாநுஸந்தேய நிகமாந்த குருஸூக்திஸஹஸ்ரம் என்றும் பெயரிடலாம். அப்படியே பெயரிட்டு எழுத ஆரம்பித்தேன், (நித்யாநுஸந்தேய) என்று விசேஷணமிட்டிருப்பதால் அதற்குச் சேர சதகம் போதுமென்று அறுதியிட்டேன். தேசிகன் திருவருளால் மேன்மேலும் சதகங்கள் பெருகினால் விதிவாய்க்கின்று காப்பாரார்? ஸம்ஸ்க்ருத ஸூக்திகளை க்ரந்தலிபியிலோ தேவநாகர லிபியிலோ பதிப்பித்தால் படிப்பவர்களுக்கு அநுகூலமாயிருக்கும். என் செய்வது? அத்தகைய ஸௌகரியம் வாய்க்கவில்லையாதலால் ஸர்வோபஜீவ்யமான தமிழ்லிபியே கைப்பற்றலாகிறது.... .... ....

முகவுரை முற்றிற்று.

# நித்யாநுஸந்தேய நிகமாந்தகுருஸூக்திசதகம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தது.

1 கிம் வா கரீச! க்ருபணே மயி ரக்ஷணீயே
தர்மாதிபாஹ்யஸஹகாரி கவேஷணேந?
நந்வஸ்தி விச்வபரிபாலந ஜாகருக:
ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:.

(வரதராஜ பஞ்சாசத் 37) தேவப்பெருமாளான பேரருளாளன் அடியார்களை ரக்ஷித்தருளுமிடத்தில் ஒருகைம்முதலையும் எதிர்பாராமல் தன்னுடைய நிர்ஹேதுக கருணையினால் ரக்ஷித்தருளுகிறானென்பதை ஒரு சமத்காரமாக அருளிச்செய்தபடி. .... ... ....

2 நிரந்தரம் நிர்விசதஸ் த்வதீயம் அஸ்ப்ருஷ்டசிந்தாபதமாபிரூப்யம்,
ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:.

தொண்டரடிப்பொடியாழ்வார் "இச்சுவைதவிர-அச்சுவைபெறினும் வேண்டேனரங்கமாநகருளானே!" என்றருளிச்செய்தாப்போலே, தேவப்பெருமாளுடைய வடிவழகிலீடுபட்ட தேசிகன் தமக்கு வைகுண்டவாஸத்திலும் ருசியில்லாமையை ஆணையிட்டருளிச் செய்கிறார். இங்கு ஒரு ரஸாநுபவம் ப்ராப்தம், இந்த சுலோகம் இந்நிலத்திலிருந்து கொண்டு அருளிச்செய்வதாகையாலே "வைகுண்டயாநேபி ந மேபிலாஷ:" என்றே பணித்திருக்கவேண்டும், (வைகுண்டவாஸேபி) என்றதன் கருத்து விலக்ஷணமானது; வரதப்ரபோ! எப்படியும் என்னை நீ நித்யவிபூதிக்குக் கொண்டுபோகாமல் விடமாட்டாய்; ஆனால் நான் அங்கு வஸிக்கமாட்டேன்; இவ்விடத்தேற மீண்டும்ஓடிவந்துவிடுவேன் காண் என்றபடி. .... .... .... ... ....

3 த்வஞ்சேத் ப்ரஸீதஸி தவாஸ்மி ஸமீபதச் சேத்
த்வய்யஸ்தி பக்தி ரநகா கரிசைல நாத!
ஸம்ஸ்ருஜ்யதே யதிச தாஸ ஜநஸ் த்வதீய:
ஸம்ஸார எஷ பகவந்! அபவர்க்க ஏவ.

(வரதராஜ பஞ்சாசத் 43) "வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தையடியொற்றி யருளிச்செய்கிறபடி. தேவபிரானே! நீ எப்போதும் ப்ரஸந்நமுகனாகவேயிருப்பாயாகில், நான் போக்குவரத்தின்றிக்கே எப்போதும் உன்னருகேயிருப்பேனாகில்,

அக்ருத்ரிமமான பக்தியுடையேனுயின், உன்னுடையபக்தஜனவர்க்கமும் சீறுபாறென்று ''குழாங்களாய்அடியீர்! உடன் கூடி நின்றுடுமினோ'' என்றபடி கூடிக்கலந்து வாழப் பெறுமாயின் இந்த லீலாவிபூதியேதான் நித்யவிபூதி. இதில் மூன்ருவது பாதம் சுவைமிக்கது. அடியார்களுக்குப் பரஸ்பரஸௌஹார்தம் தேட்டமாயிருக்குமன்றோ. பரமபதத்தில் ''பிணங்கியமரர்பிதற்றுங்குணங்கெழுகொள்கையினுனே'' என்னும்படியான பிணக்கமொன்றுண்டு; இங்குப் பல பல பிணக்குகள். ....

4 கர்மஸ்வநாதி விஷமேஷு ஸமோ தயாலு:
ஸ்வேநைவ க்லிப்தமபதேசம வக்ஷமாண:,
ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த !
ஸ்வாபாவிகம் தவ ஸௌஹ்ருத்வமிதம் க்ருணந்தி.

(சரணுகதி தீபிகையென்கிற தீபப்ரகாச ஸ்தோத்ரம்-14) ஸம்ப்ரதாயத்தில், ஈச்வரலாபம் சேதநனுக்குப் பேரு? சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேரு? என்று ஒரு சர்ச்சையுண்டு; சேதநனுக்குத்தான் ஈச்வரலாபம் பேறு-என்று பலர் மருண்டிருப்பர்கள்; அந்த மருளைப் போக்கியருளுகிருர் ஸ்வாமி இந்த சுலோகத்தினுல். இதில் (த்வரஸே) என்கிற க்ரியாபதம் உயிரானது. எவனுக்கு லாபமோ அவனன்றோ விரைவு கொள்வான். நம்முடைய விரைவு அல்பம். அவனுடைய விரைவு அநல்பம். இதில் [ஸ்வேநைவ க்லப்தமபதேசம் அவேக்ஷமாண:] என்றது வடிக்கட்டின ஸத்ஸம்ப்ரதாயம். நாமாகச் செய்து போரும் தன்மை ஏதுமில்லை; அவன் விளைவிக்க விளைகின்றதத்தனை-என்று காட்டினபடி. .... ... ... .... ...

5 ஸ்ரீமாந் பிதாமஹவதூபரிசர்யமாண:
சேதே புஜங்கசயநே ஸ மஹாபுஜங்கம்,
ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம்
பக்தாநுகந்து ரிஹ யஸ்ய ததாகதாநி.

(வேகாஸேது ஸ்தோத்ரமென்கிற யதோக்தகாரி ஸ்தோத்ரம்.)

ஐதிஹ்யத்தை உட்கொண்ட சுலோகமிது ''போகின்ற கணிகண்ணன் பின்போன மழிசையர்க்காப் பைந்நாகப்பாய் சுருட்டிக் கொண்டெழுந்த பரஞ்சோதீ'' இத்யாதிப்படியே யதோக்தகாரி யெம்பெருமான் திருமழிசைப் பிரானுக்காகப் பைந்நாகப்பாய் சுருட்டிக் கொண்டு எழுந்து போனதும் மீண்டு வந்ததுமான அவனுடைய போக்குவரத்தை அநுஸந்திப்போமாயின் ஸம்ஸாரக் குழியில் நமக்கு

உண்டான போக்குவரத்துக்கள் ஒழியும்-என்றாராயிற்று. இத்தால் இவ் வைதிஹ்யத்தில் அவிச்வாஸங்கொண்டவர்களை நிரஸித்தபடி... ....

6 யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:
ப்ரபுல்ல பலிதம் சிர: பரமிஹ க்ஷமம் ப்ரார்த்தயே,
நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்ய்யே விபோ !
பரஸ்பரஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய.

(அபீதிஸ்தவம் 28) ஸ்வாமி தேசிகன் காஞ்சீ வாஸத்தை விட்டுக் கோயில் வாஸத்தை விரும்பிப் புறப்பட்டெழுந்தருளுகையில் ஸ்ரீரங்கத்தில் துருஷ்கயவநாதிகளால் நேர்ந்திருந்த துன்பங்களையும், பிள்ளை லோகாசாரியரும அவருடைய திருத்தம்பியாரும் முதலானோர் வெளியேறின விஷயத்தையும் திருச்செவி சாத்திப் பரிதபித்தவராய், அந்தப் பரிதாபம் நீங்கி ஆசாரியர்களோடுகூடிவாழ விரும்பினபடியைத் தெரிவிக்கும் சுலோகமிது. [பரஸ்பரஹிதைஷிணும் பரிஸரேஷு மாம வர்த்தய] என்கிற வ்ாக்விந்யாஸம் ரஸிக்கத்தக்கது..... .... ...

7 அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூ நவலோக்ய ஜாதநிர்வேதா,
கரணகளேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாதகருணே! த்வம்.

(தயாசதகே) பட்டர், ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர்க்கடயிதும் தயமாந மநா:...." என்றருளிச்செய்த சுலோகமே இங்கு ஆர்யையாக வடிவெடுத்தபடி. அசித்ப்ராயங்களான ஜந்துக்களைக் கண்டு நிர்வேதமடைந்தவன் பகவான்-என்றருளிச்செய்தார் பட்டர்; இங்கு ஸ்வாமி அருளிச்செய்வது அதனிலும் விலக்ஷணமானது; கருணையே நிர்வேதமடைந்ததாக ஸ்வாமி அருளிச் செய்தவிது ஆலங்காரிகஸார்வபௌமத்வத்தைக் காட்டி நிற்கும். தயை என்பது பரது:க்கது:க்கித்வரூபம்-நிர்வேதரூபம் என்று காட்டுவதற்கு இங்ஙனே அருளிச்செய்தபடி... ....

8 மயிதிஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாநிதராந் விசிந்வதீத்வம்,
அபராதகணைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ ?

(தயாசதகம் 29) எம்பெருமான் வாத்ஸல்யகுணவிசேஷத்தாலே பக்தர்களின் தோஷங்களை போக்யமாகக்கொள்ளுகிறானென்பதை ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிறார். வாத்ஸல்யம் தயையின் ப்ரபேதமாகை

யாலே வாத்ஸல்யத்தை நோக்கிச் சொல்ல வேண்டியதை தயையை நோக்கிச் சொல்லுகிறார். அம்மா தயாதேவியே! உனக்கு நான் அபரிமிதங்களான குற்றங்களையிட்டு உன் வயிற்றை நிரப்பியிருந்தும் நீ வயிறு நிரம்பப்பெறாதே அல்பதோஷமுடையவர்களைத் தேடித்திரிகிறாயே, அந்தோ! எங்ஙனம் நீ பிழைப்பாய் என்கிறார். .... ...

9 ஔத்ஸுக்யபூர்வமுபஹ்ருத்ய மஹாபராதாந்
மாத:! ப்ரஸாதயிதுமிச்சதி மே மநஸ் த்வாம்,
ஆலிஹ்ய தாந் நிரவசேஷமலப்ததத்ருப்தி:
தாம்யஸ்யஹோ வ்ருஷகிரீசதயே! கதம் த்வம்?

(தயாசதகம் 97) கீழே *மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே* என்கிற சுலோகத்தில் ப்ரஸ்தாவித்தருளின தோஷபோக்யத்வத்தை விவரித்து நிலைநாட்டுகிறது இந்தசுலோகம் (கீழ்சுலோகமொன்றில்*ப்ரபலவ்ருஜிந தப்ராப்ருதப்ருதாம்* என்றதும் சேர்த்து அநுஸந்தேயம்.) ப்ராப்ருதம்-உபஹாரம் என்றபடி. "தோஷமே பச்சையாக" என்றஸ்ரீவசநபூஷண ஸூக்தியையடியொற்றினபடி. இங்கு *ஔத்ஸுக்யபூர்வமுபஹ்ருத்ய மஹாபராதாந்* என்றதும் *ஆலிஹ்ய தாந்நிரவசேஷமலப்தத்ருப்தி:* என்றதும் கலங்கினவர்களை நன்குதெளிவிக்க அருளிச்செய்தபடி. .... .... .... .... ....

10 ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம்,
ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்.

(ந்யாஸதசகம் 3) இந்த சுலோகத்திலுள்ள ஸ்வசப்தங்களை எண்ணிப்பார்க்கவேணும். ஒன்பது ஸ்வசப்தங்களுக்கும் பகவானொருவனே பொருளாகிறான். சேதனன் தலையிலுள்ள சிக்கு நாற்றத்தை அறவே கழிப்பதற்கு அத்தனை ஸ்வசப்தங்கள் இட்டருளினபடி. .... ....

11 ஆர்த்தேஷ்வாசுபலா ததந்யவிஷயேபி உச்சிந்நதேஹாந்தரா
வஹ்ந்யாதேரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ,
ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்மநியதத்வத்பாரதந்த்ர்யோசிதா
த்வய்யேவ த்வதுபாயதீரபிஹிதஸ்வோபாயபாவாஸ்து மே.

(ந்யாஸதிலகம் 10) ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கு அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாநஹேது" என்பது ஒரு சூர்ணிகை. அதை ஸேவித்த தேசிகன் "நித்யமான

ஆத்ம ஸ்வரூபத்துக்கு நாசமில்லாமையாலே ஸ்வரூப நாசகமென்னக் கூடாது" என்றார். மற்றோரிடத்தில் "அதிகார விருத்தமென்ன ப்ராப்தம்" என்றார். இங்கு பாரதந்த்ர்ய ஸ்வரூப விருத்தமென்கிறார். எங்ஙனே யென்னில், இந்த சுலோகத்தில் ப்ரபத்தியின் பெருமை சொல்லுகிறார். ப்ரபத்திக்கு ஐந்து விசேஷணங்களிட்டருளுகிறார். ஒவ்வொரு விசேஷணமும் ப்ரபத்திக்கு ப்ராபகாந்தரத்திற்காட்டில் வாசியைத் தெரிவிப்பதாம். 'ப்ரபத்தி: யாவதாத்ம நியதத்வத் பாரதந்த்ர்யோசிதா'என்றபோதே மற்றது ஸ்வரூபவிருத்தமென்றதாயிற்று.

12 வாஸோ ஹ்ருத்வா திநகரஸுதாஸங்கிதௌ வல்லவீநாம்
லீலாஸ்மேரோ ஜயதி லலிதாம் ஆஸ்தித: குந்தசாகாம்,
ஸவ்ரீடாபிஸ் ததநு வஸநே தாபிரப்யர்த்த்யமாநே
காமீ கச்சித் கரகமலயோரஞ்ஜலிம் யாசமாந:.

(கோபால விம்சதி 20.) நாச்சியார் திருமொழியில் (3-1) *தோழியும் நானும் தொழுதோம்* என்றதற்கு அவதாரிகையாகக் கண்ணபிரானுடைய வார்த்தை யிருக்கவேணும்; அது இந்த சுலோகமேயாகும். கரகமலயோரஞ்ஜலிம் யாசித்தான் கண்ணன்; இருபெண்களின் இரண்டு கரங்களினால் அஞ்ஜலி ப்ராப்தமாயிற்று. .... .... *

13 இச்சாமீந! விஹாரகச்சப! மஹாபோத்ரிந்! யத்ருச்சாஹரே!
மாயாவாமந! ரோஷராம! கருணாகாகுத்ஸ்த! ஹேலாஹலிந்,!
க்ரீடாவல்லவ! கல்கவாஹந! தசாகல்பிநநிதி ப்ரத்யஹம்
ஜல்பந்த: புருஷா: புநந்தி புவநம் புண்யௌகபண்யாபணா:.

(தசாவதார ஸ்தோத்ரம்-12) *அஜாயமாநோ பஹுதா விஜாயதே* என்றும், *எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர்தலைவா!* என்றும் எண்ணிறந்ததிருவவதாரங்கள் செய்து போருகின்ற எம்பெருமானுக்கு தயாநஸௌகர்யத்திற்காகப் பத்து அவதாரங்கள் மட்டும் எடுத்தோதப்பட்டன. ஒவ்வோரவதாரத்துக்கும் தனித்தனியே ஒவ்வொரு சுலோகமிட்டு பத்தவதாரங்களுக்கும் பத்து சுலோகங்களான பிறகு, பத்தவதாரங்களையும் இந்த ஒரே சுலோகத்தில் அநுஸந்திக்கிறபடி. .... .... .... ....

14 மிதோ பேதம் தத்வேஷ்வபிலபதி பேதச்ருதிரதோ
விசிஷ்டைக்யாதைக்யச்ருதிரபி ச ஸார்த்தா பகவதீ,

இமாவர்த்தௌ கோப்தும் நிகிலஜகதந்தர்யமயிதா
நிரீசோ லக்ஷ்மீச: ச்ருதிபிரபராபி: ப்ரணிததே.

(ஸங்கல்ப ஸூர்யோதயே-அந்யத்ரச) விசிஷ்டாத்வைதக் கொள்கையைச் சுருக்கமாகத் தெரிவிக்கும் சுலோகமிது.) பேதச்ருதியென்றும் அபேதச்ருதி என்றும், கடகச்ருதி என்றும் வேதவாக்யங்கள் மூன்று வகுப்பாயிருக்கும். சேதந - அசேதந - ஈச்வரர்களாகிற மூன்று தத்துவங்களுக்குப் பரஸ்பரபேதத்தைத் தெரிவிக்கும் ச்ருதிவாக்யங்கள்—*த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா* இத்யாதிகள் பேதச்ருதிகளெனப்படும். *ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம* இத்யாதி வாக்யங்கள் பேதத்தைக் காட்டாமையாலே அபேத ச்ருதிகளெனப்படும். *யஸ்ய ப்ருதிவீ சரீரம்* இத்யாதி வேத வாக்யங்கள் கீழ்ச்சொன்ன பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகையாலே கடகச்ருதியெனப்படும். அடுத்த ச்லோகத்தில் விளக்கங் காண்க. .... ....

[ப்ரணிததே—கர்மணிரூபம்]. .... .... ....

15 யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாதவித்யாதம:
ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமந்திமயுகே கச்சித் விபச்சித்தம:,
தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா—
ஹேவாகப்ரதமாநஹைதுக கதாகலலோலகோலாஹல:

(ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்—(3) ப்ரதாநப்ரதிதந்த்ராதிகாரம்) ஒவ்வொரு தர்சநத்திற்கும் ப்ரதிதந்த்ரார்த்தங்களென்று சில வுண்டு; அவற்றுள் ப்ரதானமாயிருப்பதோரர்த்தம் ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தமெனப்படும். நம்முடைய தரிசனத்தில் சரீராத்மபாவமே ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தமாகக் கொள்ளப்படுகிறது. 'ருத்ர:பகவாந்' என்ருல் "ருத்ரசரீரகோ பகவாந்" என்றபடி. 'ஸ ஆத்மா, அங்காநி அந்யா தேவதா:" என்று உபநிஷத்து ஸ்பஷ்டமாகவே ஓதிற்று. ஆக இந்த சரீராத்மபாவத்தைக் கொண்டு ஸகல வேதவாக்யங்களையும் ஒருங்க விடலாம். இதனை நன்குணர்ந்த ஒரு வ்யக்தியின் முன்னே இதர மதஸ்தர்களின் வாக்கோலாஹலமெல்லாம் மடிந்தொழியும். ....

16 மயி தத்தாவதாநாயாம் விச்வதோஷாபஹாரிணி,
ந சக்யமீச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்.

(ஸங்கல்பஸூர்யோதயே—அஸூயாதேவியின் பேச்சு.) நான் உஷாராயிருந்தேனாயின் அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான ஸர்வேச்

வரனுங்கூட குற்றமற்றவனாக இருக்கமுடியாது. (அவனையும் குற்றவாளியாகவே உலகம் கூறுமென்றபடி). அஸூயையபடுத்தும் பாடு இதுவாம். அடுத்த சுலோகத்தில் இது விசதமாகும். .... ...

17 நிரவதிகுணக்ராமே ராமே நிராகஸி வாகஸி-
ஸ்ப்புரணமுஷிதாலோகா லோகா வதந்தி ஸதந்திகே,
வரதநுஹதிம் வாலித்ரோஹம் மநாகபஸர்ப்பணம்
பரிமிதகுணே ஸ்பஷ்டாவத்யே முதா கிமுதாஸதே ?

(ஸங்கல்பஸூர்யோதயே.) (கீழ் சுலோகத்தில் அஸூயையின் பெருமை சொல்லிற்று. அதன்காரியம் சொல்லுகிறது இதில்.) இராமபிரானே "குணநாமாகரோ மஹாந்" என்று பேர்பெற்றவன்; தோஷலேசமுமில்லாதவன். கடூரமான வாக்குடையவர்கள் அப்படிப்பட்ட இராமனைப்பற்றியும் மஹான்களிடத்திலே அசூயையினால் பழிக்கிறார்கள். [என்னவென்று பழிக்கிறார்கள்?] தாடகாவதம் – பெண்கொலை செய்தான்; தனக்கொரு தீங்கும் செய்யாத வாலியை வதைத்தான்; கரதூஷணவதத்தில் நாலடி பின்வாங்கினான் – இத்யாதியாக. குணக்கடலான பெருமாளையே இப்படி பழிக்கும்போது அற்பகுணசாலிகளும் தோஷம் மலிந்தவர்களுமான நம்போல்வாரைப் பழிக்கக் கேட்கவேணுமோ? பழிக்காமலிருக்க எப்படி முடியும்? அசூயைக்கு வசப்படாத உலகமுண்டோ? .... .... .... *

18 ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்,
ந தத் திஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்

(ஸங்கல்ப ஸூர்யோதயே – அந்யத்ர ச.) ஆசார்யருடைய கடாக்ஷத்தின் மேன்மை கூறுகிறது.) ஆசாரியர் ஒரு திருக்கண்ணாலோ இரு திருக்கண்களாலோ கடாக்ஷித்ததனால் எந்த நன்மையை ஒருவன் பெறுவானோ, அதை அரன் அயன் அரி ஆகிய மும்மூர்த்திகளின் கடாக்ஷத்தினாலும் பெறமுடியாது என்கை. ஆசார்யனுடைய ஒரு கண்ணாவது-சோபநாசம்ஸியான உட்கண். * ஆமுதல்வனிவனென்று ஆளவந்தார் எம்பெருமானாரைக் கடாக்ஷித்தருளினது போல உட்கண்ணால் கடாக்ஷிப்பதே போதுமானது. வெளியிலுள்ள இரு திருக்கண்களினாலும் அமலங்களாக விழித்தாலும் போதும். சுலோகத்தின் முடிவிலுள்ள (கஸ்யசித்) என்பது மூன்றிடங்களில் அந்வயிக்கும். கஸ்யசித் திஸ்ருபி: த்ருஷ்டிபி: தத் ந லபேத – ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்ற முக்கண் மூர்த்தியின் மூன்று கண்களாலும் அந்த நன்மையைப் பெற

பெறமாட்டான். கஸ்யசித் அஷ்டாபி: த்ருஷ்டிபி: தத் ந லபேத — நால் வேதங்களையுங்கொண்ட நான்முகனுடைய எட்டுக்கண்களாலும் அந்த நன்மையைப் பெறமாட்டான். கஸ்யசித் ஸஹஸ்ரேண த்ருஷ்டிபிரபி தத் ந லபேத — *ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: * என்றும் *துணை மலர்க்கண்களாயிரத்தாய்* என்றும் ஸஹஸ்ராக்ஷனுகை ஓதப் பட்ட ஸர்வேச்வரனுடைய ஆயிரங்கண்களாலும் அந்த நன்மையைப் பெறமாட்டான். இங்கு (ஸஹஸ்ரேணாபி) என்றவிடத்து இந்திரனை நினைக்கவும் ப்ரஸக்தியில்லை. ஜ்ஞானலாப ப்ரகரணத்தில் அவனைச் சொல்ல என்ன ப்ரஸக்தி? அப்படி சிலருடைய வுரை மறுக்கத்தக்கது.

---

## ஸ்ரீமதுபயவே ஜீயப்பங்கார் பரமபதப்ராப்தி.

சின்ன காஞ்சீபுரத்தில் ஆனைகட்டி வீதியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. நல்லப்பா ஜீயப்பங்கார் ஸ்வாமி யென்பவர் ஸுப்ர ஸித்தராயிருந்தவர், ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி தர்மகர்த்த குடும்பத்தைச் சேர்ந்தவர், தேவப்பெருமாள் ஸன்னிதி தென்னாசார்ய தர்சன நிர்வாஹகவர்க்கத்தில் தலைமை பெற்றிருந்தவர். தேவப்பெருமாள் திருவடிகளில் பேரன்புபூண்டவர். பகவத் விஷயாதி காரியாய் விளங்கினவர். திருத்தகப்பனாரையும் பிதாமஹரையும் போலவே ஸம்ப்ரதாயச்ரத்தாளுவாக விளங்கினவர். எண்பது திரு நக்ஷத்ரத்திற்கு அருகிலிருந்தவர். இப்பெரியார் நேற்று சித்திரை மாதத்தில் 21௳ (4—5—79) காஞ்சியில் தமது திருமாளிகையில் நாலு நாள் திருமேனி பாங்கில்லாமலிருந்து ஆசாரியன் திருவடி யடைந்தார். ஞானசீலவயோவ்ருத்தராயிருந்த இப்பெரியாருடைய வியோகம் காஞ்சீ வாஸிகளுக்கு அஸஹ்ய மென்பது தவிர, தேவப்பெருமாளுக்கே அஸஹ்ய மென்னத்தட்டில்லை. குணசாலிகளாய் சிரஞ்ஜீவிகளான ஏகபுத்ரனுக்கும், ஏகபௌத்ரனுக்கும், தேவியாருக்கும் நமது நிர்வேதத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். .... ....

## திருநாராயணபுரம் ஸ்ரீயதிராஜ ஜீயர்ஸ்வாமியின் பரமபத ப்ராப்தி.

மேல்கோட்டை யென்னும் திருநாராயணபுரத்தில் ஸ்ரீ யதுகிரி யதிராஜ மடாதிபதியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி

ஸ்ரீயதுகிரி யதிராஜ ஜீயர் ஸ்வாமி நேற்று சித்திரை நக்ஷத்ரத்தன்று (10–5-79உ)அநாயாஸமாகத்திருநாடலங்கரித்ததறிந்து ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம மிகவருந்துகின்றது. திருநாராயணப் பெருமாளுடைய அருளிச்செயல் கோஷ்டியைக் காத்தருள்வதிலும் புஷ்பகைங்கர்யத் திலும் அத்விதீய ச்ரத்தாளுவாக எழுந்தருளியிருந்தார். உபய வேதாந்த ரஹஸ்யார்த்த ப்ரவீணராக எழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியின் பதவிக்கு ஏற்ற மஹநீயரைத் திருநாராயணன் விரை வில் ஸங்கல்பித்தருளவேணுமென்று ஸ்ரீவைஷ்ணவ மண்டலியின் ப்ரார்த்தனை.

---

# உபந்யாஸகளைபாக்யமாலையில் முப்பத்தாருவதுமலர்

## ஸம்ப்ரதாய ஸங்கேதங்களின் விவரணம்.

நம்முடைய பூருவாசார்யர்கள் கம்பீரமாகச் சில ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்து வைக்கின்றனர். அவை ஸங்கேதச் சொற்களாக வழங்குகின்றன. அவற்றின் பொருள்கள் ஆங்காங்கு வியாக்கியானங் களினால் தெரியவரும். அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் சில காட்டி விவரிக்கிறோமிங்கு.

— பண்டை நாளில் பிறவி —

இதுவொரு ஸங்கேதமாய்ப் பரமபோக்யமான ஸ்ரீஸூக்தி. ஆசார்யஹ்ருதயத்தில் (81) "பண்டைநாளில் பிறவி உண்ணுட்டுத் தேசிறே" என்று வருகிறது. திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகம் "பண்டைநாளாலே நின் திருவருளும்" என்று தொடங்குவது. அதில் முதல் மூன்று பாசுரங்களில் வரிசையாக ஒரு விலக்ஷண விஷயம் சொல்லப்படுகிறது. முதற்பாட்டில் "நின்கோயில் சீய்த்துப் பல்படிகால் குடி குடிவழிவந்தாட் செய்யுந் தொண்டர்" என் கிறது. இரண்டாம் பாட்டில் "உன் பொன்னடிக்கடவாதே வழி வரு கின்றவடியர்" என்கிறது. மூன்றாம்பாட்டில் "தொடர்ந்து குற்றே வல்செய்து தொல்லடிமை வழிவருந்தொண்டர்" என்கிறது. இவற்றால், ஆத்மாவின் இயற்கை வடிவமான தாஸ்யத்திற்கு விரோதியான அஹங் காரம் குடிபுகாததாய், கைங்கர்யத்திற்கு அநுரூபமான குடிப்பிறவி இவ்வளவு விசதமாக வேறு எந்த பதிகத்திலுங் காணப்படவில்லை. இச் சிறப்பைத் திருவுள்ளம்பற்றிப் பூருவர்கள் "பண்டை நாளில் பிறவி" என்று ஒரு ஸங்கேதமிட்டனர். "பண்டை நாளாலே" யென்கிற பதி கத்தில் பலகாலும் சிறப்பித்துக் கூறப்படுகிற பிறவி என்றபடி. ...

— ஐந்து நகர்கள் —

தென்னகர், நன்னகர், மாநகர், நீணகர், பெருநகர் என்று ஐந்து நகர்கள் ஆசார்ய ஹ்ருதயம் மூன்றும் ப்ரகரணத்தில் குறிக்கப்படுகின்றன. தென், நன், மா, நீள், பெரு என்று விசேஷணங்களில் பேதமொழிய, நகர் என்பதே ஐந்திடங்களிலும் விசேஷ்யம். மேலே குறித்த விசேஷணங்கள் பொதுவாகச் சிறப்பையே தெரிவிக்கும். எவ்வூருக்குத் தென்னகரென்று பெயர்? எவ்வூருக்கு மாநகரென்று பெயர்?.... என்று கேட்டால் பாசுரங்களின் உபஸ்திதியும் விசேஷஜ்ஞதையுமில்லாதவர்கள் விடையிறுக்க முடியாது.

(1) மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருவல்லவாழென்னும் திருப்பதியைப்பற்றி நம்மாழ்வாரருளிச்செய்த "மானேய் நோக்குப் பதிகத்தில் ஈற்றுப் பாசுரத்தில் "ஆயிரத்துள்ளிவைபத்தும் திருவல்லவாழ்ச் சேமங்கொள் தென்னகர்மேல்" என்றருளிச்செய்திருக்கையாலே திருவல்லவாழ்க்குத் தென்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

(2) ஒப்பிலியப்பன் ஸன்னிதியென்கிற திருவிண்ணகர்ப்பதிக்கு இட்டருளின திருவாய்மொழியில் (6, 3-2)* தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே* என்றருளிச் செய்திருக்கையாலே திருவிண்ணகர்க்கு நன்னகரென்று ஸங்கேத நாமதேயம்.

(3) தென் திருப்பேரைத் திருப்பதிக்கு இட்டருளின "வெள்ளைச் சுரிசங்கு பதிகத்தில் "ஏர்வளவொண்கழனிப் பழனத் தென் திருப்பேரெயில் மாநகரே" என்றருளிச் செய்திருக்கையாலே தென் திருப்பேரைக்கு மாநகரென்று ஸங்கேதமிட்டனர் (ஆசார்யஹ்ருதயகாரர்).

(4) திருவாறன் விளையென்னும் மலைநாட்டுத்திருப்பதிக்கு இட்டருளின "இன்பம் பயக்கவென்னும் பதிகத்தில் "திருவாறன்விளையென்னும் நீணகரமதுவே" என்றருளிச் செய்திருக்கையாலே திருவாறன்விளைக்கு நீணகரென்று ஸங்கேதமிட்டனர்.

(5) சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸன்னிதிக்குத் திருமங்கையாழ்வாரிட்டருளின * கையிலங்காழி சங்கன்* என்னும் பதிகத்தில் * பெருவரை மதில்கள் சூழ்ந்த பெருநகர் அரவணைமேல் * என்றருளிச் செய்திருக்கையாலே அத்தலத்திற்குப் பெருநகரென்று ஸங்கேதமிட்டனர். ஆக இவ்வைந்து ஸங்கேதங்களும் மிக அற்புதமானவை.

— உறையிலிடாதவர் —

திருமழிசைப்பிரானுக்கு இதுவொரு ஸங்கேதத் திருநாமம், (ஆசார்யஹ்ற-155.) எதை உறையிலிடாதவர்? என்று கேள்வி பிறக்கும். உறையிலிடுவதென்கிற வழக்குகத்தியைப் பற்றியதாதலால், உருவின வாளை உறையிலிடாதவர் என்பதாகும். *வாள் வீசும் பரகாலன் கலிகன்றி* என்கிறபடியே திருமங்கையாழ்வாருக்குக் கத்தி நிரூபகமாகவுண்டே யல்லது திருமழிசைப்பிரானுக்குக் கத்தியிருந்ததாக ப்ரஸித்தியில்லையே; ஆகவே உருவினவாளை உறையிலிடாதவரென்று திருமழிசைப்பிரானை எப்படிச் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். 'உருவினவாளை உறையிலிடாதவர்' என்பதற்கு ஸ்வாபதேசார்த்தரீதியில் பொருள் கொள்ளவேணும். பிரதிபக்ஷிகளை நிரஸிப்பதற்காகவே கத்தியை உறையிலிடாமல் கையிலேயே கொண்டிருப்பது வீரர்களின் வழக்கம். அப்படியே, தேவதாந்தரங்களுக்கு பரத்வஞ் சொல்லுகிற ப்ரதிபக்ஷிகளை நிரஸித்து ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை ஸ்தாபித்து வெற்றி பெறுவதற்கு எப்போதும் ஸன்னத்தராயிருப்பவர் இவ்வாழ்வார்—என்பது பற்றியே இவர்க்கு உறையிலிடாதவரென்று திருநாமஸங்கேதமாயிற்று. இவர் பிரபந்தம் தொடங்கும்போதே *நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்* என்றார். இடையில், *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* (53) என்றார். முடிவில் *இனியறிந்தேனீசற்கும் நான் முகற்குந் தெய்வம், இனியறிந்தேனெம்பெருமானுன்னை* என்றார், திருச்சந்த விருத்தத்திலுமிப்படியே பல பாசுரங்கள் காணலாம்; *காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவரை ஆணமென்றடைந்துவாழு மாதர்காள்* என்றும், *வந்தவாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த நாள், அந்த வந்த வாகுலம் அமரரேயறிவரே* என்றுமுள்ள பல பாசுரங்கள் காண்க. ... ... ... ....

— புஷ்ப த்யாக போக மண்டபங்கள் —

'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்ற மூன்று திவ்ய தேசங்களையே நூற்றெட்டுத் திருப்பதிகளுள் தலையாகக் கொண்டு எங்கும் வழங்கிவருகிறார்கள். இம்மூன்று திருப்பதிகட்குத் தலைமையுண்டானதற்கு யாது காரணமென்னில்; நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமான

திருவிருத்தத்தில் இம்மூன்று திவ்யதேசங்களை மாத்திரமே மங்களா சாஸனம் செய்தருளியதுதான் காரணம். இம்மூன்று திவ்ய தேசங்களைப் புஷ்ப த்யாக போகமண்டபங்களென்றும் பூருவர்கள் ஸங்கேதித்ததுண்டு. (ஆசார்யஹ்ரு—85.) புஷ்பமண்டபமென்பது திருமலை; த்யாக மண்டபமென்பது பெருமாள் கோயிலென்கிற காஞ்சி; போக மண்டபமென்பது கோயில். எங்ஙனேயெனில்; நம்மாழ்வார் திருமலை விஷயமாக அருளிச்செய்த *ஒழிவில்காலப் பதிகத்தில்* வானவர் வானவர்கோனொடுஞ்சிந்து பூமகிழும் திருவேங்கடம்* என்று அருளிச் செய்திருக்கையாலே திருமலை புஷ்பமண்டப மெனப்பட்டது. *வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிற புராண வசனப்படியே வேண்டுவார் வேண்டின படியே தியாகம் செய்யும் வரதன் எழுந்தருளி யிருக்குமிடமாகையாலே பெருமாள்கோயில் த்யாகமண்டபமெனப்பட்டது. *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமேயாள்கின்ற வெம்பெருமானுறையுமிடமான திருவரங்கம் பெரிய கோயிலானது *தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளி கொள்ளும்* என்கிறபடியே திவ்யபோக ஸ்தானமாயிருக்கையாலே போகமண்டப மெனப்பட்டது. .... .... .... *

## — தூது மொழிந்து நடந்து வந்தவர்கள் —

இது வொரு அற்புதமான ஸங்கேதம். இந்த ஸங்கேதங்களெல்லாம் ஆசார்ய ஹ்ருதயம் தவிர வேறு எந்த நூலில் இடம்பெறும்! திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் "என்மதிக்கு விண்ணெல்லாமுண்டோ விலை" என்றார்; உண்மையில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய மதிக்கு உபயவிபூதியும் விலையாகப்போராது. "தூது மொழிந்து நடந்து வந்தவர்கள்" என்னுமிந்த ஸ்ரீஸூக்தியிலே, தூது மொழிந்தவர், தூது நடந்தவர், தூது வந்தவர் என்று யோஜனை செய்து மூன்று வ்யக்தி விசேஷங்களைப் பொருளாக வுணரவேணும். தூது மொழிந்தவர்-சக்ரவர்த்தி திருமகனார். தூது நடந்தவர்—பாண்டவ தூதப்பெருமாள். தூது வந்தவர்-திருவடி. இந்த நிர்தேசங்கள் அருளிச்செயற் சந்தைகளிலிருந்து கொள்ளப்பட்டன. *முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து* என்கிற பாசுரத்தில் தூது மொழிந்தவராகச் சொல்லப் பெற்றுப் பிராட்டிக்குத் தூது மொழியைத் திருவடிவாயிலே சொல்லிவிட்டவர்-சக்ரவர்த்தி திருமகனார். தூது

நடந்தவர்—“கோதில் செங்கோல் குடை மன்னரிடை நடந்த தூதா” என்கிற பாசுரத்தில் தூது நடந்தவராகச் சொல்லப்பட்டு பாண்டவர்க்குத் தூதுபோன கண்ணபிரான். தூது வந்தவர்—*ஓதமா கடலைக் கடந்தேறி......தூது வந்த குரங்குக்கே* என்கிற பாசுரத்தில் தூது வந்தவராகச் சொல்லபபெற்று “தூதோஹம் கோஸலேந்த்ரஸ்ய” என்று இலங்கையில் வந்து சேர்ந்தவர் திருவடி. ஆக, தூது மொழிந்தவரென்று இராம பிரானையும், தூது நடந்தவரென்று கண்ணபிரானையும் தூது வந்தவரென்று ஹனுமானையும் நிர்தேசிக்கப் பொருத்தமாயிற்று. இம்மூவரும் செய்த செய்கைகள் அடுத்த ஸங்கேத ஸ்ரீஸூக்தியில் காணத்தக்கன. .... .... .... ....

## —ஸம்யக் ஸகுண ஸஹ போஜநம்—

ஸம்யக் போஜநம், ஸகுணபோஜநம், ஸஹபோஜநம் என்று யோஜித்து, மேலே நிர்தேசிக்கப்பட்ட மூவரும் மூன்று விதமான போஜனங்கள் செய்தமை கூறப்படுகின்றது. ஆசார்ப்ரதாநரான பெருமாள் மதங்காச்ரமத்தில் சபரிபக்கலிலே எழுந்தருளினபோது அங்கு ஒரு விலக்ஷணமான போஜனம் செய்ததாக ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்படுமிடத்து *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:* என்றார் வால்மீகி முனிவர். இது வொரு மருமமான வார்த்தை. ‘சபர்யா ஸம்யக் பூஜித:’ என்றதனால் தெரிவிக்கப்பட்ட ஸம்யக் போஜனத்தின் பரிசை ஆசார்ய ஸேவையில் பழுத்தவர்கள் அறியுமத்தனை. தூது மொழிந்தவர் ஸம்யக் போஜனம் பண்ணினமை சொல்லிற்றுயிற்று. இனி தூது நடந்தவனுடைய ஸகுண போஜனம் கேண்மின். பாண்டவர்களுக்காகத் தூது நடவாநின்ற கண்ணபிரான் விதுரர் திருமாளிகையேற எழுந்தருளி அங்குச் செய்தருளின போஜனத்தை முனிவர் சொல்லுமிடத்து “விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச” என்று சொல்லியிருக்கையாலே *குணவந்தி யென்பதில் நோக்காக ஸகுணபோஜன மெனப்பட்டது. தூது நடந்த கண்ணன் செய்த ஸகுணபோஜனமிது. இனி, தூது வந்தவனுடைய ஸஹ போஜநம் நுட்பமாக அறியத்தக்கது. பெருமாள் திருவயோத்திக்கு மீண்டருளும் போது பரத்வாஜாச்ரமத்திலே தங்க வேண்டியதாயிற்று. அப்போது திருவடியை நந்திக்ராமத்திற்குச் செய்தி சொல்ல அனுப்பிவிட்டார் பெருமாள். அங்குச் சென்ற திருவடி மீண்டும் பெருமாளிடம் வந்ததாக வான்மீகத்திலில்லை. புராணாந்தரத்தில் திருவடி திரும்பி வந்த

தாகவும், அப்போது பெருமாள் அமுது செய்து கொண்டிருந்ததாகவும், திருவடியையும் கூடக்கொண்டு ஓரிலையிலேயே அமுது செய்ததாகவும் கூறப்பட்டுள்ளது. "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹ போஜநம்" என்கிறபிரமாண வசனமும் காட்டப்படுகிறது. பெரிய திருமொழியில் (5-8-2) *வாதமா மகன் மற்கடம் விலங்கு* என்ற பாசுரத்தின் நமது திவ்யார்த்த தீபிகையிலே இது பற்றின விரிவு காணத்தக்கது. ஆக, தூது மொழிந்தவருடைய ஸம்யக் போஜநமும், தூது நடந்தவருடைய ஸகுண போஜனமும், தூது வந்தவரோடே ஸஹபோஜநமும் சொல்லிற்றாயிற்று. .... *

—ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள்—

இதுவும் ஒரு விலக்ஷணமான ஸங்கேத ஸ்ரீஸூக்தி. ஐவரில் முற்பட்டவர், நால்வரில் முற்பட்டவர், மூவரில் முற்பட்டவர் என்று யோஜிக்கவேணும். ஐவரென்பது பஞ்சபாண்டவர்களை; அவர்களில் முற்பட்டவர் தருமபுத்திரர். நால்வரென்பது தசரதபுத்திரர்கள் நால்வரை; அவர்களில் முற்பட்டவர்—பெருமாள். மூவரென்பது—ஆளவந்தார் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸப்ரஹ்மசாரிகளாயும் உடையவர்க்கு ஆசாரியர்களாயும் பிரஸித்தர்களான பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி என்று நம்பிகளென்று வியபதேசிக்கப்பட்டவர்களான மூவரை; இம்மூவரில் முற்பட்டவர் பெரியநம்பி. ஆக ஐவரில் முற்பட்ட தருமபுத்திரரும், நால்வரில முற்பட்ட பெருமாளும், மூவரில் முற்பட்ட பெரிய நம்பியும் செய்த காரியம் எவையென்னில்; அவை "ஸந்தேஹியாமல் ஸஹஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ரக்ருத்யம்" என்ற அடுத்த ஸ்ரீஸூக்தியின் வியாக்கியானங்கொண்டு அறியத்தக்கன. .... .... .... .... *

இங்ஙனே அற்புதமான ஸங்கேத ஸ்ரீஸூக்திகள் மலிந்தது ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்த்ரம். .... .... .... *

# மதியும் விதியும்.

விதியானது எவராலும் கடக்க முடியாததெனப்படும். "தைவம் திஷ்டம் பாக்தேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:" என்று அமரகோசமுதலால் தைவத்திற்கே விதியென்று பெயர். ஒவ்வொரு பிராணிக்கும் ஜனிக்கும்போதே ஆயுள் முதலானவற்றில் ஒருவிதமான தைவஸங்

கல்பம் ஏற்பட்டுவிடுகிறது. அதுதான் விதியென்பது. அந்த விதிப் படியேதான் எதுவும் நடைபெற்றுவரும். அது பழுதுபடமாட்டாது. விதிக்கு மாறாக எதுவும் நடைபெறாது. "லலாடலிகிதா ரேகா பரிமார்ஷ்டும் ந சக்யதே." என்கிற வசனம் யாவருமறிந்தது. தலையெழுத்து ஒருவராலும் தவிர்க்க முடியாதது என்பது இதன் கருத்து.

உண்மையில் தெய்வபலமென்பது எல்லாவற்றினும் மேம்பட்டதாதலால் அது அநிவார்யமென்பது மறுக்க முடியாததே. ஆனால் "மதியினால் விதியை வெல்ல முடியும்" என்பது நுண்ணறிவாளர்களின் முதுமொழியாகக் காண்கிறது. இதற்குச் சேர இதிஹாஸ புராணங்களிற் கதைகளும் பல காணப்படுகின்றன. சில கேண்மின்.

ஸாவித்ரியினால் தனக்கு ஸத்தியவானோடு விவாஹம் நிச்சயிக்கப்பட்டது. இதையறிந்த நாரதமுனிவர் 'ஸத்யவானுடைய ஆயுள் மிகவும் குறுகியுள்ளது; அவனை மணந்து கொண்டால் ஸாவித்ரி நீண்டகாலம் வாழமுடியாது; எப்படியாவது இந்த விவாஹத்தை நிறுத்தி வேறு தீர்க்காயுஸ்ஸான வொரு வரனுக்கு இவளை விவாஹம் செய்து கொடுப்பதே நலம்' என்று தெரிவித்தார். ஸாவித்ரி இதற்குச் சிறிதும் உடன்படவில்லை. விவாஹம் மாநஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்படும். இன்னவரனை விவாஹம் செய்து கொள்ள வேணுமென்று நெஞ்சால் நினைப்பது மாநஸிக விவாஹம். அதனை வெளிப்படையாகப் பேசி முடித்துக்கொள்வது வாசிக விவாஹம். அநுஷ்டான பர்யந்தமாக முடித்துக்கொள்வது காயிக விவாஹம். பிராமாணிகர்களுக்கு மும்மூன்றும் துல்யமேயன்றி இவற்றுள் வாசி கிடையாது. இன்னானை மணந்து கொள்வதென்று நெஞ்சால் நினைத்தவாறே அது நடந்தேறியதுதான். அதை மாற்றி வேறு விவாஹம் செய்து கொள்வதென்பது விதவா விவாஹ பர்யாயமே யாகும். உத்தமியான ஸாவித்ரி இதனை எங்ஙனம் இசையவல்லள்? ஏற்கெனவே பதியாக வரிக்கப்பட்ட ஸத்யவானைத் தவிர்த்து வேறொருவனை நெஞ்சாலும் நினையேனென்று உறுதி கொண்டாள். என் தலையெழுத்துப்படி ஆகட்டுமென்று கூறி அவனையே மணம்புணர்ந்து வாழ்ந்து வந்தாள். ஒரு ஸம்வத்ஸரத்திற்குள் ஸத்யவானுக்கு மரணம் அணித்தாயிற்று. ஸாவித்ரி யமனை நேரில் கண்டு பேசித் தனது வாக்சாதுர்யத்தினால் யமனை யீடுபடுத்தித் தான் தீர்க்க ஸுமங்கலியாக வாழப்பெற்றாள். இக்கதை மஹாபாரதத்தில் வநபர்வாவின் முடிவில்

வெகு அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இக்கதையைச் சிறிது விரிவாகக் கேண்மின்;—

மத்ர தேசத்தரசன் அச்வபதி யென்பவன் ஸாவித்ரீ தேவதையின் உபாஸநையினால் ஒரு மகளைப் பெற்று அவளுக்கு ஸாவித்ரி யென்றே பெயரிட்டு வளர்த்து வர, அவளுக்கு விவாஹ யோக்யமான வயஸ்ஸு வந்தும் அவளது தேஜஸ்ஸு அப்ரதிமமாய் ஒருவர்க்கும் அணுக வொண்ணாதபடி யிருந்ததனால் அவளை ஒருவரும் மனைவியாக வரியாதிருக்க, பிதாவானவர் 'பெண்ணே! நீயே சென்று உனக்குத் தகுந்த வரனை ஸ்வயம்வரமாக லபிக்கக் கடவை' என்று கட்டளையிட்டு மந்திரிகளுடன் அவளைத் தேரின்மேலேற்றி யனுப்ப, அவளும் தந்தை யிட்ட கட்டளையின்படி பல தேசங்களிலும் சென்றுபார்த்துத் தனக் கேற்ற வொருவரனை நிர்ணயித்துக்கொண்டு தந்தையிடம் திரும்பி வந்தாள். அப்போது நாரத மஹர்ஷியும் தந்தையும் உடன் வீற்றிருந்தனர். 'இவள் எங்குப்போய வருகிறாள்? என்ன செய்தி?' என்று முனிவர் கேட்க; ஸாவித்ரியே சொல்லத் தொடங்கினாள் —ஸால்வ தேசத்தரசனான த்யுமத்ஸேனன் கண்ணில்லாதவனும் ராஜ்ய மிழந்தவனுமாயிருக்கின்றானே; அவனுடைய அருமைப்புதல்வன் ஸத்யவானென்பவன், அவனை நான் கணவனாக வரித்துவந்திருக்கிறேனென்றாள். இது கேட்டவுடனே நாரதமுனிவர் 'அந்த ஸத்யவான் மஹா குணசாலி யென்பதில் ஐயமில்லை; ஆனால் அவனது ஆயுள் முடிவு இன்னும் ஒரு ஸம்வத்ஸரத்தினுள்ளே யாம்' என்று தெரிவிக்க, அரசன் மகளை நோக்கி 'அம்மா ஸாவித்ரி! முனிவர் சொல்வதைக் கேட்டாயன்றோ; அல்பாயுஸ்ஸான அவனை விட்டு வேறு கணவனைத் தேடிக்கொள்' என்று சொல்ல, அதற்கு ஸாவித்ரி சிறிதும் உடன் படாமல் 'என் விதிப்படியாகட்டும்; மாநஸிகமான விவாஹம் முடிந்து விட்ட பிறகு இனி அதனை மாற்றிக்கொள்வதென்பது நடவாதகாரியம்' என்று சொல்ல, அரசனும் நாரத முனிவருடைய அநுமதியைப் பெற்றுக் கொண்டு ஸாவித்ரியின் விவாஹத்தை நிறைவேற்றுவதாகப் பரிஜந பரிவார புரோஹிதாதிகளுடன் புறப்பட்டு அரண்யத்தில் தாய் தந்தையோடு வாஸஞ்செய்து கொண்டிருக்கின்ற ஸத்யவானுக்கு முறைப்படி விவாஹம் செய்து கொடுத்து வந்தனன்.

ஸத்யவான் ஸாவித்ரியோடு இல்லற வாழ்க்கையை நடத்தி வருகிறான்; ஸாவித்திரி ஸர்வாபரணங்களையும் கழற்றிவிட்டு மரவுரியையும் காஷாயத்தையுமணிந்து கொண்டு பதிசுச்ருஷையில் ஊன்றி யிருந்தாள். இப்படி காலம் சென்று கொண்டிருக்கையில் நாரதமுனிவர் சொல்லியிருந்த நாள் குறுகினதை நெஞ்சிற் கொண்டாள். கணவனுடைய மரணம் நான்கு நாளில் நேரப்போகிறதென்றறிந்து முன்னமையொரு த்ரிராத்ர வ்ரதத்தை யனுட்டித்து முடித்தாள். அந்த நாளும் அணுகிவிட்டது. ஸத்யவாந் கோடாலிப்படையை யெடுத்துக் கொண்டு வழக்கம்போல் வனஞ்சென்றான். அன்று ஸத்யவான் வனமேகி உணவுப்பொருள்களைச் சேகரித்துக்கொண்டு விறகு வெட்டப் புகுகையில் மரணக்குறிகள் தோன்றத் தொடங்கின. உடனே அவன் தனக்குண்டான கிலேசங்களைச் சொல்லிக் கொண்டு ஸாவித்ரியின் மடியில் தலைவைத்துத் தரையில் படுத்துக் கொண்டான். நாரத முனிவர் சொன்னபடி கணவனது மரணகாலம் ப்ராப்தமாய்விட்டதென்றறிந்த ஸாவித்ரி மிகவும் சோகித்திருக்கையில் பாசமும் கையுமாக அங்கு வந்து நின்ற யமனையும் கண்டு மெல்லவெழுந்து கைகூப்பி நின்று 'உம்மைப் பார்த்தால் அமாநுஷ தேவதையாகக் காண்கிறது; நீர் யார்? இவ்விடம் எதற்காக வந்தீர்?' என்று விநயமாய்க் கேட்க; அதற்கு அவர் 'அம்மா ஸாவித்ரி! நீ சிறந்த பதிவிரதையாதலால் உன்னோடு பேசுகிறேன். நான் யமன்; உனது கணவனுடைய வாழ்நாள் முடிந்துவிட்டபடியால் அவனுயிரைக் கொண்டுபோக வந்திருக்கிறேன். பெரும்பாலும் எனது கிங்கரர்களே வந்து இக்காரியம் செய்துபோவது வழக்கம். ஆயினும் உன் கணவன் பரமதார்மிகனாகையால் அவர்கள் இவனை யணுக சக்தரல்ல ஆதலால் நானே வர நேர்ந்தது' என்று சொல்லிக் கொண்டே ஸத்யவானுடைய உயிரைக் கவர்ந்து கொண்டு தென்திசை நோக்கிச் செல்லலுற்றான். ஸாவித்ரியுதனவன் மிக்க வருத்தத்துடன் யமனைப் பின் சென்றாள். அதுகண்ட யமன் 'அம்மா ஸாவித்ரி! நீ என்னோடு கூட வருவதில் பயனில்லை; திரும்பிச்செல்; கணவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முறைப்படி நிறைவேற்றப் பார்' என்றான். அப்போது ஸாவித்ரி மீளாமல், கணவனுயிர் செல்லுமிடத்தே என்னுயிரும் செல்லத்தக்கதன்றோ வென்று சில தருமநுட்பங்களைச் சொன்னாள்; அவைகேட்ட யமன் மிகமகிழ்ந்து 'அம்மா! உனது கணவனுயிரைத் தவிர்த்து வேறு வேண்டிய வரம் என்பால் பெற்றுப் போ' என்றான். 'கண்கெட்டு வனத்தில் கிலேசப்

படுகின்ற எனது மாமனர் கண்பெற்று வாழ அருள்புரிக' என்று கோரினள். யமனும் அங்ஙனமே யாகுக வென்று அருள் செய்தவிடத்தும் ஸாவித்ரி மீளாமலே பின்னேயும் தொடர்ந்தாள். 'அம்மா! வீணாக சிரமப்பட்டு என்னைப பின் தொடராதே; திரும்பிச் செல்' என்று யமன் சொல்லவும் திரும்பாமலே மற்றும் பல தருமநுட்பங்களைப் பேசிக் கொண்டே பின்தொடர்ந்தாள். அப்பேச்சுக்களுக்கு மிகமகிழ்ந்த யமன் 'கணவனுயிரைத்தவிர்த்து வேறொரு வரம் பெற்றுப்போ' என்ருன். 'ராஜ்யப்ரஷ்டரான என் மாமனர் ராஜ்யம் பெற்று இனிது வாழவேணு மென்று கோரி, அங்ஙனமே வரம் பெற்றும் மீளாமலே மேலும் பல தருமஸூக்ஷ்மங்களைப் பேசிக் கொண்டே பின் தொடர்ந்தாள்; தன் தந்தைக்கு நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரமபெற்ருள். பின்னையும் தொடர்ந்து இனிதாகப் பேசிக்கொண்டுபோய், தனக்கு ஸத்யவானிடத்தில் நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரம் கேட்டாள். யமன் மெய்மறந்து அந்த வரத்தையும் கொடுத்து ஸத்ய வானுடைய உயிரையும் தந்து போயினன். மதியினல் விதியை வென்று விட்டாளன்ருேவிவள்.

மார்க்கண்டேயன பதினறுபிராயமே வாழும் விதியுடையனு யிருந்துவைத்தும் தேவதா ஸமாராதன பலத்தினல் விதியைக்கடந்து நீண்ட ஆயுள் பெற்றமையைப் புராணங்களில் கேள்விப் படுகின்ருேம். கதைகளினுல் விதியை மதியால் வெல்லலாமென்பது திண்மை பெறு கின்றது. மதியிலாதவர்களே விதிக்கு வசப்பட்டிருப்பர்கள். அன்ன வர்களில் கம்ஸனைத் தலைவனுக நினைப்பது. .... ... (1)

— பகவான் இருக்குமிடங்கள் —

சிறுவர்கள் பள்ளிக்கூடம் செல்ல ஆரம்பிக்கும்போது ஒருவர்க் கொருவர் ஸம்பாஷணை செய்கையில் பல விநோதப்பேச்சுக்களைப் பேசிக்கொள்வதுண்டு. அவற்றுள் ஒரு விநோதப் பேச்சு—'இராமா! கடவுள் இருக்குமிடத்தை நீ சொலுவாயானுல் உனக்கு ஒரணு தருவேன்' என்று கண்ணன் சொல்ல, அதற்கு இராமன் 'கண்ணு! கடவுள் இல்லாதவிடத்தை நீ சொல்லுவாயானுல் உனக்கு இரண்டணு தருவேன்.' என்ருன் என்பது. இதனுல், எம்பெருமான் எங்கும் நிறைந்த பரம்பொருள் என்கிற வுணர்ச்சி இளம்பிராயம் தொடங்கியே சிறுவர்களது நெஞ்சிற் பதிந்திருப்பதாகத் தெரியவருகின்றது. "அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்று

வேதாந்தபரிசயம் செய்த பிறகு பெரியார்களுக்கு உண்டாகக்கடவதான உணர்ச்சி சிறுவர்களுக்கு உண்டாகிறதென்றால் இதற்குக் காரணம் உயர்குடிப் பிறப்பே யென்னவேணும். ஸத்குல ப்ரஸூதி யென்பது மஹாஸுக்ருத பலங்களில் தலையானது. உயர்குடியிற் பிறந்தவர்களுக்கு ஆஸ்திக்யம் முதலான சிறந்த குணங்கள் இயற்கையிலேயே தோன்றுகின்றன. எங்குமுளன் கண்ணனென்ற வுணர்ச்சி முற்காலத்தில் ப்ரஹ்லாதாழ்வானுக்குத் தோன்றி யிருந்ததாக இதிஹாஸ புராணங்களினாலறிகிறோம். அவ்வுணர்ச்சி ஆஸ்திக குடும்பங்களில் ஒவ்வொரு சிறுவர்க்கும் உண்டாகி வருவதாகக் காண்கிறோம். இளம பிராயத்திலுள்ள வுணர்ச்சி மேன்மேலும் வளர வேண்டுவது ப்ராப்தமாயிருக்க, இக்காலத்தவர்களுக்கு வயது முற்றமுற்ற இளம்பிராயவுணர்ச்சிக்கு எதிரிடையானவுணர்ச்சியே உன்மேஷமடைவதாகக் காண்கிறது. 'எம்பெருமான் எங்குமுளன்' என்பதற்கு எதிராக எம்பெருமானெங்குமிலன், எம்பெருமானே யிலன்' என்கிற பிரசாரமே முற்றுகின்றது.

'எம்பெருமான் எங்கும் நிறைந்தபொருளாகில் கோவில்களிற் சென்று தொழவேண்டுவதேன்? ப்ரஹ்லாதன் எந்த கோயிலுக்குப் போனான்?' என்றிப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்க முன்வருகிறார்கள் நவநாகரிகர்கள். காற்று எங்கும் நிறைந்த பூதமாயிருக்க அதற்காக விசிறியைத் தேடுவதேன்? நூறுமாயிரமும் செலவுசெய்து எலெக்ட்ரிக் டங்காக்கள் போட முயல்வதேன்? என்று அவர்கள் ஆராய்ச்சி செய்ய வேண்டும். "அக்நௌ திஷ்டதி விப்ராணாம் ஹ்ருதி திஷ்டதி யோகிநாம். ப்ரதிமாஸு அப்ரபுத்தாநாம் ஸர்வத்ர ஸமதர்சிநாம்." என்கிறார்கள் மஹர்ஷிகள். இந்தச்லோகத்தின் பொருள்யாதெனில்; பகவான் அந்தணர்களுக்கு அக்நியிலுள்ளான்; யோகிகளுக்கு உள்ளத்தே யுள்ளான்; அறிவிலிகளுக்குப் பிரதிமைகளிலுள்ளான்; ஸமதர்சிகளுக்கு ஸர்வத்ரவுள்ளான்—என்பதாம்.

அந்தணர்களுக்கு பகவான் அக்நியிலிருக்கிறானென்றால் என்ன கருத்தென்னில் "குளித்து மூன்றனலை யோம்புங்குறிகொளந்தணமை" என்று திருமாலையில் தொண்டரடிப்பொடியாழ்வாருளிச் செய்கிறபடி. அந்தணர்கள் தங்களுக்குரிவதான நித்யகர்மாநுஷ்டானத்தில் நிரதர்களாயிருந்தால்— "வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே, பந்தா நாந்ய்ஸ் தத்தோஷகாரக:" எனப்பட்ட பகவதாராதந நிரதர்களா யிருந்தால் அதன் மூலமாக பகவத் தர்சனம் கிடைக்குமென்றவாறு.

ஸ்ரீரஸ்து

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்யோ நம:



# ஆழ்வார்திருநகரி ஸ்ரீராமாநுஜ சதுர்வேதி மங்கலம்

# கூரத்தாழ்வான் ஸன்னிதி விமானம் ராஜகோபுரம்

# மஹா ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கரார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன்.



# அடியேன் செய்யும் விண்ணப்பம் [P. B. A.]

ஈ மொழியைக்கடக்கும் பெரும்புகழானை கூரத்தாழ்வானுக்கு ஆழ்வார் திருநகரியில் அநாதி காலமாக விளங்கும் ஸன்னிதி பலவகையிலும் ஜீர்ணோத் தாரணம் செய்யப்பட வேண்டியிருந்ததனால் இரண்டு வருஷகாலமாக நடந்து வந்த அத்திருப்பணி ஓரளவில் பூர்த்திபெற்று ஸம்ப்ரோக்ஷணம் ஸந்நிஹித காலத்தில் நிச்சயிக்கப்பட்டுள்ளது. நிகழும் ஸித்தார்த்தி ளு வைகாசி மீ 13 உ (27—5—79) ஞாயிற்றுக்கிழமை மிருகசீரிஷ நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் காலை விருஷப லக்னத்தில் (6 மணிக்குள்ளாக) ஸம்ப்ரோக்ஷணம் நடைபெறும். 23—5—79 புதன்கிழமை மாலையில் ம்ருத்ஸங்கிரஹணம் அங்குராரோபணமாகி உபயவேதபாராயணங்களுடன் நாடோறும் இருவேளைகளிலும் ஹோமம் நடைபெற்று 27 உ பூர்ணாஹுதியும் சாத்துமுறை கோஷ்டியும் ததீயாராதநாதிகளும் ஆழ்வானுக்குத் திருவீதிப்புறப்பாடு உத்ஸவமும் விசேஷவைபவம் பொலிய நடைபெறும். ஐந்து நாட்களிலும் சிறந்த வித்வான்களின் சொற்பொழிவுகள் நடைபெறும்; ஆஸ்திகபக்த சிகாமணிகளின் நேத்ர ச்ரோத்ரானந்தங்களுக்கு வாய்ப்பான ஸமய விசேஷமிது

ஸ்ரீமதுபயவே இளையவில்லி ஞானப்பிரான் பூவராஹாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. அப்புசடகோபாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. பெரியநம்பி பராங்குச தாஸ ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. R P ராமையங்கார் ஸ்வாமி முதலானோர் முன்னின்று நடத்தி வைக்குமிந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் பக்தர்களுக்கு விசேஷித்து அநுபவிக்கத்தக்கது. அடியேன் அவ்விடம் விடைகொண்டு அநுபவானந்தம் பெற அசக்தனாயிருப்பதால் கீழ்க்கண்டவாறு ஒரு விலக்ஷணாநுபவபாக்யம் பெறுகிறேன். (அதாவது) **ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்யோ நம:** என்கிற வாக்யத்திலுள்ள அக்ஷரங்களுக்குச் சேர ஆழ்வானுடையவும் பட்டருடையவும் ஸ்ரீஸூக்திகளை யிட்டுப் பொழிப்புரையாக விண்ணப்பஞ் செய்தல். குற்றங்களைந்து நற்றங்கொள்க.

ஸ்ரீமத் பராங்குசமுனீந்த்ரமனோநிவாஸாத்
தஜ்ஜாநுராகரஸமஜ்ஜந மஞ்ஜஸாப்ய.
அத்யாப்யநாரததத்துத்திதராக யோகம்
ஸ்ரீ ரங்கராஜ சரணம்புஜ முந்நயாம:

(அதிமாநுஷஸ்தவம் 3) ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடிகள் இயற்கையாகவே உத்தமபுருஷலக்ஷணங்கொண்டு சிவந்திருக்க, அதற்கொரு ஹேதூத்ப்ரேக்ஷை பண்ணுகிறாரிவர். கவிஸமயஸரணியில் அநுராகம் சிவப்பு நிறமாக வருணிக்கப்படும். பராங்குசமுனீந்த்ரராகிற நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலே நித்யவாஸஞ்செய்யும் ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடி அவ்வநுராகத்தின் உறைப்பு இன்னும் மாறாமையாலே சிவந்திருப்பதாகச் சொன்னவித ஹேதூத்ப்ரேக்ஷை. ஆழ்வாருடைய திருவுள்ளம் பகவத் பக்தி பரிபூர்ணமென்பதும், அத்திருவுள்ளத்திலேயே எம்பெருமான் நிரந்தர வாஸம் செய்தருள்கிறானென்பதும் இதனால் வ்யஞ்ஜிதம். ... ... ※

வந்தாருப்ருந்தாரக மௌலிமாலா
யுஞ்ஜாந சேத: கமலாகரேப்ய:
ஸங்க்ராந்தராகாவிவ பாதபத்மௌ
ஸ்ரீ ரங்க பர்த்துர் மநவை நவைச.

(ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் 1-123) முன்னே காட்டின ஆழ்வானுடைய ஸ்ரீ ஸூக்திச்சாயையிலேயே இந்தச்லோகமவதரித்தது விஷயமதுவே ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடிகளின் சிவப்புக்கு ஒரு காரணத்தை உத்ப்ரேக்ஷித்தார் ஆழ்வான். இவர் மூன்று காரணங்களை உத்ப்ரேக்ஷிக்கிறார் வந்து வணங்குகின்ற தேவர்களின் கிரீடஸமூஹங்களில் ரத்நப்ரபைகள் சிவந்திருக்குமாதலால் அந்தச் சிவப்பு ஸ்ரீரங்கநாதனது திருவடிகளில் வந்தேறிற்றோ? யோகிச்ரேஷ்ட ஹ்ருதயத்திலே இத்திருவடிகள் உறைந்ததனால் அங்குள்ள ராகம் இவற்றிலே வந்தேறிற்றோ? பாதஸம்வாஹநம் பண்ணுகின்ற பிராட்டியின் திருக்கைகளின் சிவப்புத்தான் ஒட்டிக் கொண்டதோ? என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியான பெரியபெருமாளுடைய திருவடிகளைச் சிந்திப்பதும் துதிப்பதும் செய்கின்றேனென்கை. இந்த ச்லோகத்தில் யுஞ்ஜாநசப்தத்தினால் குறிக்கப்பட்ட யோகி (ஆழ்வான் ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் பராங்குசமுனீந்த்ரரேயாவர். தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் நாலாவது காண்டத்தின் உபக்ரமம் ※ யுஞ்ஜாந: ப்ரதமம் மந: ※ என்றுள்ள விசேஷம் அடியேனது வைதிகோபந்யாஸங்களில் கேட்டறியத்தக்கது.

த்வம் மீநபாநீய நயேந கர்மதீபக்திவைராக்ய ஜுஷோபிபர்ஷி,
ரங்கேச மாம் பாஸி பிதம்பசம் யத் பாநீயசாலம் மருபூஷு தத்ஸ்யாத்.

(ஸ்ரீ ரங்கராஜஸ்தவஸமாப்திச்லோகமிது.) எம்பெருமான் கர்மஜ்ஞாந பக்தி விரக்தி ஸம்பந்நர்களைக் காத்தருள்வது மீனுகுத் தண்ணீர் வார்ப்ப தோடொக்கும்; அகிஞ்சநர்களைக் காத்தருள்வது மருகாந்தாரத்திலே தண்ணீர்ப் பந்தல் வைப்பதோடொக்கும்.

ஸமாஹிதைஸ் ஸாது ஸநந்தநாதிபிஸ்
ஸுதுர்லபம் பக்தஜநைர் அதுர்லபம்,
அசிந்த்யமுத்யத்புத மப்ரதர்க்கணம்
வரப்ரத த்வத்பதமாப்நுயாம் கதம்?

(ஆழ்வானுடைய வரதராஜஸ்தவத்தின் அவஸாநே) பேரருளாளரே! ஸ்வப்ரவ்ருத்தி சீலர்களான ஸநகஸநந்தநாதிகளுக்கு அரிதாய் பக்த ஜனங்களுக்கு எளியதாய் அசிந்த்ய திவ்யாத்புதமான உன்பதத்தை எங்ஙனே கொலவந்தெய்துவனே?

சித்ரம் விதேர் விலஸிதம் த்விதமாவிரஸ்தி
துஷ்டாத்மநாமய மஹோ ஸல துர்விபாக:
யத் கேசித் அத்ரபவதீம் ச்ருதி மாச்ரயந்தோபி
அர்த்தே குத்ருஷ்டிவிநிவிஷ்டதியோ விநஷ்டா:.

(ஸ்ரீ வைகுண்டஸ்தவே-13) அறு சமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே * என்றவிடத்து அடியறுக்கப் பட்டவர்களாகச் சொல்லப் பட்ட விமதர்களின் தௌர்ப்பாக்யத்திற்குத் திருவுள்ளம் நொந்து பேசுகிறாராழ்வான். இவர்கள் சிலர் வேதத்தை ப்ரமாணமாக இசைந்தும் அதன் உண்மைப் பொருளை உணராமல் அபார்த்தங்களை வருணிப்பது அன்னவர்களின் பாபபலமான தைவதுர்விலஸித மென்கை ... *

ஹார்த்தம் தமஸ் ஸதஸதீச விவேக்துமீசா
மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி,
தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம்
தத்ரைவ கேபி சடலாச் சலபீபவந்தி.

(ஸ்ரீரங்க ராஜஸ்தவம் உத்தரசதகம்-1) எம்பெருமானைப் பரம காருணிகனென்கிறோம். கருணையினாலே அவன் செய்த காரிய மென்னவென்றால், அகவிருளைப் போக்கவும் ஸதஸத்விவேகம் பண்ணவும் பாங்காகக் கலைகளும் வேதமும் நீதி நூலுமான சாஸ்த்ரங்களை இருளிலே திரிவார்க்கு விளக்கேற்றிக் கொடுப்பாரைப் போலே கொடுத்தருளினான் அந்த சாஸ்த்ர தீபத்தினாலே சில பாக்கியசாலிகள் எம்பெருமானைக் காணப்பெற்று அனுபவிக்கிறார்கள். சில தௌர்ப்பாக்கியசாலிகளோ வென்னில், விட்டில்கள் விளக்கிலே விழுந்து மடியுமாபோலே அந்த சாஸ்த்ரத்திலே விழுந்து அபார்த்தங்களைச் செய்து மடிகிறார்கள்.

நம: ஸ்ரீரங்க நாயக்யை யத்ப்ரூவிப்ரமபேதத:
ஈசேசிதவ்ய வைஷம்ய நிம்நோந்நதமிதம் ஜகத்.

(ஸ்ரீரங்கராஜஸ்தவே 1-7) இவ்வுலகமானது செல்வம்மிக்க மஹான்களாலும் ஏழைமை பூண்ட எளியவர்களாலும் மேடுபள்ளமாயி ராநின்றது. இப்படி விஷம நிலைமையாயிருப்பதற்குக் காரணம் பெரிய பிராட்டியின் புருவ நெறிப்பின் வாசியேயாம். அவளுடைய கடாக்ஷத்திற்குப் பாத்ரமானவிடம் மேடாகவும், திருக்கண்ணோக்கத்துக் கிலக்காகாத விடம் பள்ளமாகவுமிருக்குமென்கை. அன்னபெருமைவாய்ந்த பிராட்டியைத் தொழுகின்றேனென்கை.

மின்னிலங்கு திருவுருவும் பெரியதோளும்
　　கரிமுனிந்த கைத்தலமுங் கண்ணும் வாயும்
தன்னலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே
　　தாழ்ந்திலங்கு மகரஞ்சேர் குழையுங்காட்டி
என்னலனு மென்னிறைவு மென்சிந்தையும்
　　என்வளையுங் கொண்டென்னையாளுங் கொண்டு
பொன்னலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலினூடே
　　புனலரங்க மூரென்று போயினாரே.

(திருநெடுந்தாண்டகம் - 25) பட்டர் திருவுள்ளவுகப்புக்காக ஈண்டு இஃது அநுபவிக்கப்படுகிறது) மின்னல் போலப் பளபளவென்று விளங்கு கின்ற திருமேனியும் பெரிய திருத்தோள்களும் குவலயாபீட மதயானையைச் சிறிப்புடைத்த திருக்கைகளும் திருக்கண்களும் திருவதரமும் திருத்துழாய் மாலையின் கீழே தாழ்ந்து விளங்குகின்ற மகரகுண்டலங்களுமாகிற இவற்றை

ஸேவை ஸாதிப்பித்து என் அழகையும் என் அடக்கத்தையும் என்னெஞ்சையும் என்கைவளைகளையும் கொள்ளை கொண்டு என்னையாட் கொண்டு புனலரங்கமூரென்று போயினரே! என்று பிரிவாற்றாமை தோற்றப்பேசினபடி.

ச்ரேய: கிரந்து கிரணச் சரணாரவிந்த
நிஷ்யந்தமாந மகரந்தரஸௌக தேச்யா:
தஜ்ஜா: ச்ருதேர் மதுந உத்ஸ இதி ப்ரதிதா:
மாங்கள்யரங்கநிலயஸ்ய பரஸ்ய தாம்ந:

(அதிமாநுஷஸ்தவம் -2) அனைவர்க்கும் க்ஷேமங்கரமான ஸ்ரீரங்க விமானத்திலுறைபவரான பெரிய பெருமாளுடைய திருவடித் தாமரைகளில் நின்று பெருகாநின்ற மகரந்தரஸப்ரவாஹமென்னலாம் படியாய் "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்று வேதத்தில் மதுப்ரவாஹமென்று தெரிவிக்கப்பட்டவைகளான (சரண) கிரணங்கள் நமக்கு நன்மை பயக்க வேணுமென்கை.

ப் பக்திப்ரபாவ பவதத்புதபாவபந்த
ஸந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌகபூர்ண:
வேதார்த்த ரத்நநிதிரச்யுத திவ்யதாம
ஜீயாத் பராங்குச பயோதி ரஸீமபூமா.

(ஸ்ரீவைகுண்ட ஸ்தவம் -3) நம்மாழ்வாரை ஒரு கடலாக ரூபிக்கிறாராழ்வான். கடலானது ரஸௌகசப்தவாச்யமான ஜலப்ரவாஹத்தாலே நிரம்பியிருக்கும்: விலக்ஷணமான பக்தி விசேஷத்தாலே ஆச்சரியமான அபிப்ராய விசேஷங்கள்தோன்றி (ப்பாசுரங்காலே) நவரஸங்களும் மலிந்தவர் ஆழ்வார். கடல் ரத்நாகரமாயிருப்பது போல் ஆழ்வார் வேதார்த்த ரத்நநிதியாயிருப்பர். கடல் எம்பெருமானுக்கு உறைவிடமாயிருப்பது போலவே ஆழ்வாரும். பெருங்கடல் போலே பெருமை மிக்கவருமாவர். இப்படிப்பட்ட ஆழ்வார்க்குப் பல்லாண்டு.

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே.
அஸ்மத்குரோர்ப் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

(ஸ்ரீவைகுண்டஸ்தவம்-முதல்சுலோகம் எம்பெருமானார் தநி) எம்பெருமானுடைய திருவடித்தாமரை யிணையாகிற ஸுவர்ணத்திலுள்ள நிரந்தரவ்யாமோஹத்தினால் அவை தவிர மற்ற விஷயங்களை த்ருணீ கரித்திருப்பவரும் ஆசார்ய சிகாமணியும் கருணைக்கடலுமான எம்பெருமானாருடைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறேனென்று பஞ்ச ஸ்தவோபக்ரமத்திற்கு ஸ்வாசார்ய வந்தனமாகிற மங்களா சரணம் பண்ணினாராயிற்று. ... ...

நம: ப்ரணவ சோபிதம் நவகஷாய கண்டாம்பரம்
த்ரிதண்ட பரிமண்டிதம் த்ரிவித தத்வ நிர்வாஹகம்,
தயாஞ்சித த்ருகஞ்சலம் தளிதவாதிவாக்வைபவம்
சமாதி குணஸாகரம் சரணமேமி ராமாநுஜம் [ஆழ்வான் முக்தகம்]

அர்வாஞ்சோ யத்பத ஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய. பூர்வே
மூர்த்நா யஸ்யாந்வய முபகதா தேசிகா முக்திமாபு:,
ஸோயம் ராமாநுஜ முநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம்
யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:?

கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.

---

## ஆழ்வானைப்பற்றின அபூர்வ ஐதிஹ்யங்கள்

(1) திருவாய்மொழியில் (7-10-5) ஊ மலரடிப்போதுகளென்னும்பாட்டில் இரண்டாமடி 'பலரடியார்முன்பருளிய' என்பது இங்கு ஈட்டில் அருளியுள்ள ஐதிஹ்யத்தின் ஸாரமாவது. எம்பெருமானார் காலத்திலே அரசாண்டு வந்த சோழ ராஜன் வைஷ்ணவ த்ரோஹியாகையால் ஆங்காங்குள்ள விஷ்ணு ப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவனுக்கு இஷ்டரானவர்கள் மந்த்ரபூர்வமாக ப்ரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு பிம்பங்களையழியச் செய்தால் ஊருக்குப் பெருத்த தீங்கு விளையும் என்று சொல்ல, அது கேட்ட சோழன் அந்த ப்ரதிமைகளில் தெய்வசக்தியை உத்வாஸனம் பண்ணி யழியச் செய்வோம் என்று நிச்சயித்து ஒரு ப்ராஹ்மணனுக்குப் பணங்கள் கொடுத்து 'நீ அத்ருச்யாஞ்ஜனமிட்டுக் கொண்டு உத்வாஸனம் பண்ணு' என்று ஆஜ்ஞாபிக்க அவனும் திவ்யதேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜனமிட்டுக் கொண்டு உத்வாஸனம் பண்ணி பகவத்விக்ரஹங்களைக் கடலிலே எடுத்தெறிகிற செய்தியை எம்பெருமானார் திருச்செவிசாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம்

பெரிய கோயிலை விடாதே நோக்கிக் கொண்டு போருகிறோம்; இவ்விடத்திற்கும் அழிவு வரும்படி ஆஸுரவர்க்கம் மேலிடாநின்றது. இனிமேல் செய்யவேண்டுவதென்?' என்று வியாகுலப்பட்டுப் பெரியநம்பியோடே சிந்தித்திருக்க, 'நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வரும்படியாக உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரைப் பின்னே அனுப்பவேணும். என்பின்னே வாரா நின்றால் ஒருவன்பின்னே போகிறோம் என்று தன்னெஞ்சில் படாதே நிழல்போலே என்னைப் பின் செல்பவனாக இருக்கவேண்டும் அப்படிப்பட்ட ஒரு சிஷ்யனைப் பார்த்தனுப்பும்' என்று பெரிய நம்பி திருவாய் மலர்ந்தருள இப்படிப்பட்ட ஆத்மகுண பரிபூர்ணரான சிஷ்யர் ஆழ்வானொருவனே என்பது உடையவர்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திருவாக்கினால் வெளியிடுவிக்க வேணுமென்றெண்ணிக் கொண்டு நம்பியை நோக்கி இப்படிப்பட்டசிஷ்யர் இவ்விடத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே' என்று சொல்லி நிற்க. 'நம் கூரத்தாழ்வானை அனுப்பலாகாதோ? என்று நம்பி நியமித்தருள அருகிலிருந்த ஆழ்வான் இதைக் கேட்டு நம்பிகள் நம் ஸ்வரூபத்தினுண்மையை இங்ஙனேயறிந்து பல சிஷ்யர்களின் முன்னே இப்படி யருளிச் செய்யும் படியான பாக்யம் பெற்றோமே! என்று பெருமகிழ்ச்சி யடைந்து நம்பிகளின் திருவுள்ளப்படியே ப்ரதக்ஷிணத்திற்குப் பின் சென்றார். 'பலரடியார் முன்பருளிய' என்ற இடத்திற்கு இது[illegible]வும் பொருத்தமான இதிஹாஸம். ... ... *

(2) பெரிய திருமொழி (7-5-2) 'பாரித்தெழுந்த' பாசுரத்தில் 'பாரதத்துத் தேரில் பாகனாயூர்ந்த' என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்த ஸ்ரீ ஸூக்திகள். 'ஆழ்வானுக்கு மூலம் வாசித்துப் போந்தார் சிலரிலே ஒருவருக்கு க்ரந்தம் பார்க்கவேண்டி, ஆழ்வானோடே திருமுடிக்குறையிலே யிருந்து பாரா நிற்கச் செய்தே அரையன் வந்தானாய், அவ்வளவிலே அவர் கையில் க்ரந்தத்தை ஆழ்வான் தான் வாங்கிப்படித்துக் கொண்டிருந்தானாம். [விவரணம்] ஆழ்வானுக்கு நேத்ரபாடவம் குன்றியிருந்த காலத்தில் ஸ்ரீ பாஷ்யாதி ப்ரவசனங்களுக்கு மூலமுங்[illegible]ஸேவிக்கச் சிலரைத் துணைகொண்டிருந்தார். அவர்களிலே ஒருவர்க்கு ஆழ்வானிடத்தில் ஒரு க்ரந்தம் ஸேவிக்க வேண்டியுதாயிற்று. அவர் அபிமானமுள்ள ஆசார்ய புருஷர் போலும்; அதனால் தாம் ஆழ்வானிடத்தில் சிஷ்யனாகவிருந்து வாசிப்பது பிறர்க்குத் தெரியலாகாதென்று கருதி அவர் இதை ஆழ்வான் பக்கலில் விண்ணப்பிக்க, ஆழ்வான் மூக்குறும்பறுத்தவராகையாலே அதற்கிணங்கி ஏகாந்தமான ஓரிடத்திலே வீற்றிருந்து ப்ரவசனம்' செய்து வந்தார். சிஷ்யர் கையிலே புஸ்தகமிருப்பது வழக்கம். ஒருநாள் ஒரு ஜமீன்தாரி அந்தப் பக்கமாக வரும்போது அவனைக் கண்ட அந்த சிஷ்யன் தான்